உ

ஓம் சரவணபவா

# ஸ்ரீ முருகன்

# அரோஹரா துதி



— இயற்றியவர் —

**எஸ். எம். பி. சின்னையா**

உப்புராசி – புப்புரஸ்ஸ.

**10-7-62**

விலை சதம் 25

ஓம் சரவணபவ.

1 அரனரின் புதல்வனே அரிதிருமால் மருகனே
பொருளெனக் கருளும் முருகா.
அரனரின் திருநுதல் அக்கினிப் பொறிகளால்
அவதரித்திட்ட முருகா.
அரக்கனுக் காகவே சரவணப் பொய்கையில்
ஆறுமுகமான முருகா.
தக்கன் தவ மழித்த முக்கணனுக் கிளைய
தணிகா சலத்தின் முருகா
ஆயிரம் கோடி ஜெக ஜோதிப்ர காசனே
அடியாரைக் காரும் முருகா.

2 அடங்காத சூரனை கூர்வடிவேல் கொண்டு
அறுத்துக் குவித்த முருகா.
சண்டப்ர சண்டனே சதுர்மறையோர் புகழ
சமர்செய்து வென்ற முருகா.
அண்டாதி தேவர்கள் கொண்டாடச் செய்திட்ட
சண்டப்ர சண்ட முருகா.
தேவரைச் சிறையிட்ட அரக்கனை வதைத்திட
ஜெனன மெடுத்த முருகா.
ஆயிரம் கோடி ஜெக ஜோதிப்ரகாசனே
அடியாரைக் காரும் முருகா.

3 சின்ன பின்ன மாகவே சூரனின் சதைகளை
சிதறப் பிளந்த முருகா.
கால்வேறு கைவேறு உடல்வேறு தலைவேருய்
கழட்டி எறிந்த முருகா.
வீராதி வீரனே விஷ்முண்டோன் குமாரனே
வெற்றி வடிவேலு முருகா.
ஆறு முகத்தழகும் பன்னிருவிழியழகும்
புயங்க ளீராறு முருகா.
ஆயிரம் கோடி ஜெக ஜோதிப்ர காசனே
அடிமை யெனைக் காரும் முருகா.

4 தங்கமயமாகவே தனியொளி வீசிய
தனிகாசலத்தின் முருகா.
கண்ணிலே தீப்பொறி சுடரிட்டெறியவே
கலகல வென்ன முருகா
சிங்கம் போல் கர்ச்சித்து நாகம் போல் அசுரனை
நாசமது செய்த முருகா.
கையிலே பிடித்தவேல் கற கற கற வெனச்
சுலன்றோடச் செய்த முருகா.
ஆயிரம் கோடி ஜெக ஜோதிப்ரகாசனே
அடிமை யெனைக் காரும் முருகா.

5 முகத்திலே மீசைப் பட பட படவென்ன
பதறித் துடித்த முருகா.
கால்களில் தண்டை கலீர் கலீறென்னக்
கதித்துக் குதித்த முருகா.
மார்பிலே முத்து மணிபளீர் பளீறென்ன
மங்கள பிஷேக முருகா.
விகசித மயிலேறி விறு விறெனப் பறந்துவரும்
வெற்றிவடி வேலு முருகா.
ஆயிரம் கோடி ஜெக ஜோதிப்ர காசனே
அடிமை யெனைக் காரும் முருகா.

6 வல்லமை பேசிய வள்ளியை மணம் புரிய
வந்தவடி வேலு முருகா.
குஞ்சரிவள்ளியைக் கொஞ்சியே பின்னாலே
குணமாறிச் சென்ற முருகா.
காயாத கானிலே கவன் வீசும் வள்ளியைக்
கண்டாசைக் கொண்ட முருகா.
ஆலோலக் குற வள்ளி ஒளிகண்டு மயங்கியே
வனவேடனான முருகா.
ஆயிரம் கோடி ஜெக ஜோதிப்ர காசனே
அடியாரைக் காரும் முருகா.

7 வேடுவர் விரைந்து வரப் பயந்தோடியோர் வேங்கை
மரமாக நின்ற முருகா.
ஆயிரமாயிரம் கணைவந்து பாய்ந்தாலும்
அசையாமல் நின்ற முருகா
அஞ்சாமல் வேடுவர் கூட்டத்தைக் கூர்வடி
வேலினால் வென்ற முருகா.
வேடுவர் படையெடுத்து உனைத் தேடிவந்திட
விருதுக்கு நின்ற முருகா.
ஆயிரம் கோடி ஜெக ஜோதிப்ர காசனே
அடிமையெனைக் காரும் முருகா.

8 ஏழுமலை மீதிலும் உயர்ந்தமலை தன்னிலே
அமர்ந்த குரு நாத முருகா.
ஊசிமலை பாசிமலை உத்ராக்ஷம் காய்க்குமலை
சச்சிதானந்த முருகா.
வேள்விமலை விராலிமலை விபூதிமலை சந்தமலை
சொந்தமலை யுனது முருகா.
தங்கமலை வெள்ளிமலை கந்தன்வள்ளி தெய்வானை
வாழும்மலை ஏழும் முருகா.
ஆயிரம் கோடி ஜெக ஜோதிப்ரகாசனே
அடியாரைக் காரும் முருகா.

9 சித்தர்கள் போற்றும்மலை பக்தர்கள் வாழும்மலை
சங்கீத மலையின் முருகா,
கந்தையா எந்தனுடைகலி தீர்க்க வந்தருள்
கழுகுமலை வாழும் முருகா.
மேருகிரிமலை மீதில் மயிலாடக் குயில் கூவும்
விந்தையென் கூறு முருகா.
ஏறுமயிலேறி விளையாடுமொரு ஜோதியே
ஏழைக் கிரங்கும் முருகா.
ஆயிரம் கோடி ஜெக ஜோதிப்ர காசனே
அடிமையெனைக் காரும் முருகா.

10 ஐயும் கிலியும் சௌவும் நீயும்
கிலியும் சௌவும் நீயும் முருகா.
நீயும் நீயும் அம் உம் ஓம் சரவனபவ
பாலசுப்ரமன்ய தேவ முருகா.
சச்சிதானந்தனே சற்குரு நாதனே
சடாக்ஷரப் பொருளே முருகா:
உத்தமி பரஞ்சோதி நித்திய கல்யானி
சத்தி உமை பெற்ற முருகா.
ஆயிரம் கோடி ஜெக ஜோதிப்ர காசனே
அடியாரைக் காரும் முருகா.

11 சரவணப் பொய்கையில் அறுமலராயிருந்து
உருக் கொண்டெழுந்த முருகா.
பிரணவப் பொருள் கண்ட புன்னிய மூர்த்தியே
பிரமனைச் சிறைவைத்த முருகா
கார்த்திகைப் பெண்களின் அமுதான ஜோதியே
கற்பூரத் தீப முருகா
தந்தைக்குக் குருவான; உபதேச மொழிசொன்ன
மந்திரவாதி முருகா
ஆயிரம் கோடி ஜெகஜோதிப்ர காசனே
அடிமையெனைக் காரும் முருகா

12 தேவாதி தேவர்கள் சப்த ரிஷிமார்களும்
திடுக்கிடச் செய்த முருகா
ஈரேழு பதிநான்கு அண்ட புவனங்களும்
இனையேது உனக்கு முருகா
ஆயிரத்தெட்டு அழகுவேல் செடில்பூட்டி
அடியாரைக் கார்க்கும் முருகா
அரோஹரா சரவணபவா சன்முகா உந்தன்
அங்க முருகாதோ முருகா
ஆயிரம் கோடி ஜெகஜோதிப்ர காசனே
அடிமையெனைக் காரும் முருகா

13 அன்னையின் கற்பத்தில் உருவாகி நானிந்த
அவனியில் பிறந்தும் முருகா
மண்மீதிலே பிரண்டு உருண்டு தவழ்ந்து நடந்து
பேசவறியாதும் முருகா
ஓடிவிளையாடியும் பாடிப் படித்ததும்
பருவம் வரு முன்னே முருகா
பருவ வயதானதும் அறியாத புத்தியால்
பேரின்ப மறந்தேன் முருகா
ஆயிரம் கோடி ஜெக ஜோதிப்ர காசனே
அடிமையெனைக் காரும் முருகா

14 அன்னை தந்தையரின் அமுதமொழி கேளாமல்
அறிவிழியானேன் முருகா
நித்தமுனைப் போற்றித் துதிக்க வறியாமலே
நிர் மூடனுனேன் முருகா
புவிமீதில் விலைமாத ரபிலாசை மிகக்கொண்டு
பித்தனாய்த் திரிந்தேன் முருகா
எத்தனைக் குறை குற்றம் செய்தேனோ மன்னித்து
எனைக்கார்க்க வாரும் முருகா
ஆயிரம் கோடி ஜெகஜோதிப்ர காசனே
அடிமையெனைக் காரும் முருகா

15 காவடிக்காரனே கதிர்காம நாதனே
கவலை தீரெந்தன் முருகா
எங்கும்ப்ர காசனே ஏழுமலை வாசனே
ஏழையெனைக் காரும் முருகா
சேவற் கொடியோனே சிவசுப்ரமண்யனே
திருப்பரங் குன்ற முருகா
அன்னையும் தந்தையும் உனையன்றி வேறில்லை
அவனியி லெனக்கு முருகா
ஆயிரம் கோடி ஜெகஜோதிப்ர காசனே
அடிமையெனைக் காரும் முருகா

16 இடரேதும் வாராமல் எமபாச மனுகாமல்
இதுவேலைக் காரும் முருகா.
உன்னையே நம்பியே உயிர் கொண்டுலாவுரேன்
உயிர் க்ஷார்க்க வாரும் முருகா.
தேவர்க் கதிபதி இந்தர புத்ரிதெய்
வானையை மணந்த முருகா.
சாலோக சாமீப சாரூப சாயுஜ்ய
பதமருள வரும் முருகா.
ஆயிரம் கோடி ஜெகஜோதிப்ர காசனே
அடிமை யெனைக் காரும் முருகா.

17 அரோஹரா வென்றுன்னைத் தினந்துதி செய்திடும்
அடியவர்க குதவும் முருகா.
அல்லலும் அலைச்சலும் தொல்லையும் வாராமல்
துணையாக வாரும் முருகா
காணுமல் மக்களுனைக் கண்ணீர் வடிக்கின்ற
காட்சியைப் பாரும் முருகா.
அங்கங்கு பக்தர்கள் அரோஹரா முருகாவென
அழைப்பதைப் பாரும் முருகா.
ஆயிரம் கோடி ஜெக ஜோதிப்ர காசனே
அடிமையெனைக் காரும் முருகா

18 நாடினேன் உன்னையே பாடினேன் மலமலென
ஓடிவர வேனும் முருகா
பக்தர்கள் போற்றிட பறந்து வரும் மயிலேறி
பவனி வரும் தங்க முருகா.
காவடி எடுத்துன்னைக் கோடான கோடிபேர்
காணவருவார்கள் முருகா.
தொண்டர்க்குத்தொண்டன் நீ வம்பர்க்குவம்பன் நீ
தோகைமயிலேறு முருகா.
ஆயிரம் கோடி ஜெகஜோதிப்ர காசனே
அடிமையெனைக் காரும் முருகா.

19 வற்றாத பாக்கியமும் செல்வமும்தந்தெனக்
கருள் புரிய வேணும் முருகா.
வஞ்சனை பேய் பில்லி சூனியங்களேதும்
வாராமல் காரும் முருகா.
உன்பேரைச் சொன்னாலே பேய்பில்லி சூனியம்
ஓலமிட்டோடும் முருகா.
சரியை கிரிகை யோகம் ஞானமதைத் தந்தருளும்
தணிகா சலத்தின் முருகா.
ஆயிரம் கோடி ஜெகஜோதிப்ர காசனே
அடியாரைக் காரும் முருகா.

20 ஆடியிலுந்தனைத் தேடியே பக்தர்கள்
ஓடிவருவார்கள் முருகா.
நாடிவரும் பக்தர்கள் பாடி வருவதைக் கண்டுன்
மனமு முருகாதோ முருகா.
நான் மறை யோர் புகளும் நாதனே வள்ளிமண
வாளனே மௌன முருகா.
அகஸ்த்திய முனிவனுக் கருள் செய்த வேலனே
துதிக்கிரங்க வேணும் முருகா.
உப்புராசி நகர் வாழும் எஸ். எம். பீ. சின்னையா
உள்ளத்திருந்த முருகா.

ஆயிரம் கோடி ஜெக ஜோதிப்ர காசனே
அடிமை யெனைக் காரும் முருகா.

சுபம். சுபம். சுபம்

—✠—

